26th September 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : The total donations received from the generous public for flood relief measures for the period 10th July to 26th August 1961 is Rs. 5,41,176·33. Donations are being received even now.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, இந்தக் கேள்வியில், "காமராஜ் வெள்ள நிவாரண நிதி" என்று இருக்கிறது ; அது "சீப் மினிஸ்டர் வெள்ள நிவாரண நிதி" என்று இருக்கவேண்டுமல்லவா? அல்லது காவேரி வெள்ள நிவாரண நிதியா, காமராஜ் வெள்ள நிவாரணமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: கேள்வியை அந்தமாதிரிப்போட்டிருக்கிறார்கள். "சீப் மினிஸ்டர் ரிலீப் பண்ட்" என்றுதான் இருக்க வேண்டும்.

*Five-Year Plan (Katha-Kalakshepams)*

*1844 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ஐந்தாண்டு திட்டத்தைப்பற்றி கதா காலக்ஷேபம் செய்ய திட்டமுள்ளதா ? விவரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஐந்தாண்டு திட்டத்தைப் பற்றி கதா காலக்ஷேபம் மூலம் மக்களிடை எடுத்துச் சொல்லும் திட்டம் ஏற்கனவே கடந்த நான்காண்டு காலமாக, இந்த ராஜ்யத்தில் நடைமுறையில் இருந்து வருகின்றது. திட்டத்தைப்பற்றி மக்களிடை எடுத்துக்கூறி அவர்கள் ஒத்துழைப்பையும், ஆதரவையும் பெற திட்டப் பிரசார நாடகங்கள், கதா காலட்சேபம், வில்லுப்பாட்டு இவைகள் மூலம் மதுரை செங்கல்பட்டு, தஞ்சாவூர், சேலம், கோயம்புத்தூர், கன்னியாகுமரி ஆகிய ஆறு மாவட்டங்களில் விளம்பரத் திட்டத்தின்கீழ்(Integrated Field Publicity Scheme) ஆண்டுதோறும் முக்கியமாக கிராமங்களில் மாவட்ட விளம்பர அதிகாரிகளால் நடத்தப்பட்டு வருகின்றன. இதற்காக ஆண்டுதோறும் ரூ. 20,000 ஒதுக்கப்பட்டிருக்கின்றது. இதில் கதா காலட்சேபத்திற்கும், வில்லுப்பாட்டிற்கும் ரூ. 3,000 மட்டுமே செலவிடப்படுகின்றது. அரசாங்கம் வெளியிட்ட நாடகங்களையும், பாட்டுக்களையும் அந்தந்த மாவட்டத்திலுள்ள நாடகக் குழுவினர், கலைஞர்களைக் கொண்டு நடத்தி வருகின்றனர்.

இப்படி நடத்தப்பட்ட நாடகங்கள், கதா காலட்சேபங்கள், வில்லுப் பாட்டுகள் முதலியவை பெரும்பான்மை மக்களைக் கவர்ந்து அவர்கள் பாராட்டுதலைப் பெற்றதுடன் மட்டுமன்றி, ஐந்தாண்டுத் திட்டங்களையும், அதன் நடவடிக்கைகளையும் எளிதில் புரிந்து கொள்ளவும் வழி ஏற்பட்டுள்ளது.

SRI V. K. KOTHANDARAMAN : ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றிக் கதா காலட்சேபம் செய்யக் கூடியவர்களுக்கு ஒரு நாளைக்குக் காலட்சேபம் செய்ய எவ்வளவு பணம் கொடுக்கப்படுகிறது ? அதே நேரத்தில், ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றிக் கதா காலட்சேபம் என்று சொல்லிவிட்டு, காங்கிரஸ் இயக்கத்தைப்பற்றி பிரசாரம் செய்வதற்கான மறைமுக ஏற்பாடாக இதை வைத்திருப்பது நியாயமா, முறையா என்று கேட்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நாடகம் நடத்துவதற்கு ரூ. 250 கொடுக்கப்படுகிறது. கதாகாலட்சேபம் நடத்துவதற்கும், வில்லுப்பாட்டு பாடுவதற்கும் ரூ. 30 முதல் ரூ. 50 வரை கொடுக்கப்படுகிறது.

எந்த சர்க்காராக இருந்தாலும் ஒரு திட்டம் போட்டுத்தான் நடத்த வேண்டும். அதுமாதிரிதான் ஐந்தாண்டுத் திட்டம் போடப்பட்டிருக்கிறது. அந்தத் திட்டத்திற்குப் பிரசாரம் செய்யவேண்டியிருக்கும்போது, அதைக்

கட்சிப் பிரசாரம் என்ற முறையிலே இதுவரை சுதந்திரக் கட்சிதான் புகார் சொல்லிக்கொண்டிருந்தது. இப்பொழுது கம்யூனிஸ்ட் கட்சி கூட சேர்ந்து கொண்டிருக்கிற மாதிரி தோன்றுகிறது.

SRI V. K. KOTHANDARAMAN : ஐந்தாண்டுத் திட்டமே வேண்டாம் என்று சொல்லக் கூடியவர்கள் சுதந்திராக் கட்சியைச் சேர்ந்தவர்கள். ஆனால், நாங்கள், ஐந்தாண்டுத் திட்டம் வேண்டாம் என்றோ, அதற்குப் பிரசாரம் பண்ணுதே என்றோ சொல்லவில்லை. ஐந்தாண்டுத் திட்டம் என்ற பெயரைச் சொல்லி ஒரு கட்சி இயக்கத்தை வலுப்படுத்துவதற்காக செய்யக்கூடிய முறை சரியா? என்று கேள்வி கேட்டால், அதற்குப் பதிலளிப்பதற்குப் பதிலாக, 'சுதந்திராக் கட்சி தான் சொல்லி வந்தது கம்யூனிஸ்டுக் கட்சியும் இப்படிச் சொல்ல ஆரம்பித்துவிட்டது' என்ற முறையில் சொல்லித் தட்டிக் கழிப்பது முறை அல்ல.

DEPUTY SPEAKER : It is not a question. So, I am not going to allow it.

SRI M. KALYANASUNDARAM : தலைவர் அவர்களே, ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றி ஜனங்கள் நல்ல முறையில் புரிந்துகொள்வதற்கு இந்தக் கதாகாலட்சேபம் செய்வதைவிட என் கட்சியைச் சார்ந்தவர்கள் நன்றாகத்தான் பிரசாரம் செய்துகொண்டிருக்கிறார்கள்—அதில் இருக்கும் நல்ல அம்சங்களை மட்டுமல்ல; அதில் இருக்கும் பலவீனங்களையும் சேர்த்துத்தான். என்னுடைய கட்சியைச் சேர்ந்தவர்கள் கதாகாலட்சேபக்காரர்கள் செய்வதைவிடத் திறமையாகச் செய்துகொண்டிருக்கிறார்கள். உதவி எதிர்பார்க்கவில்லை. ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலம் தேசம் வலுவடைவதைப்பற்றி ஆட்சேபணை இல்லை. முன்னேற வேண்டும். ஆனால், காலட்சேபங்கள், சில குறிப்பிட்ட காங்கிரஸ் கட்சிக்காரர்களைப் போற்றவும் மாற்றுக் கட்சிக்காரர்களைக் கிண்டல் செய்யவும் பயன்படுத்தப் படுகின்றனவே, அது தடுக்கப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கட்சிப் பிரசாரத்திற்காக இது உபயோகப்படுகிறது என்றால் கண்டிக்கத்தக்கதே. கட்சிப் பிரசாரத்திற்கு அம்மாதிரி எங்காவது உபயோகப்படுத்தியிருந்து, அது சர்க்கார் கவனத்திற்குக் கொண்டுவரப்படுமானால், அதைத் தவிர்க்க எல்லாவிதமான நடவடிக்கையும் எடுக்கப்படும். மாற்றுக் கட்சிக்காரர்களைக் கிண்டல் செய்வதைப்பற்றி எனக்குத் தெரியாது. சில சமயங்களில் "இந்தத் திட்டமே கூடாது" என்று சொல்கிறவர்களுக்குப் பதிலளிக்கிற முறையிலே ஏதாவது கிண்டல் நடந்திருக்குமா என்பதும் எனக்குத் தெரியாது.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, ஐந்தாண்டுத் திட்டத்தினை மக்களிடையே பரப்புவதற்குப் பணியாற்றுகிற அதிகாரிகள், அந்தத் திட்டம் காங்கிரஸ் கட்சியினுடைய முக்கியமான லட்சியம் என்ற காரணத்தால், தங்களையேகூட காங்கிரசுக்காரர்களாக எண்ணிக் கொண்டு, அதன் காரணமாக, மாற்றுக் கட்சிக்காரர்கள் தங்களிடத்தில் தொடர்பு கொள்ளும்போதுகூட, அவர்களை மிகவும் கேவலமாகவும் இழிவாகவும் நடத்துகிறார்கள் என்ற புகார் அமைச்சருக்குத் தெரியுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதுவரைக்கும் இம்மாதிரி புகார் எனக்கு வரவில்லை.

SRI M. D. THIAGARAJA PILLAI : தலைவர் அவர்களே, அரசாங்கம் செய்துவரும் அனேக திட்டங்களைக் குறித்துப் பிரசாரம் செய்ய வேண்டியிருக்கும்போது, ஐந்தாண்டுத் திட்டப் பிரசாரத்திற்காகக் குறைந்த நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது. இன்னும் அதிக நிதி ஒதுக்கி, பிரசாரத்தை இன்னும் விரிவு படுத்துவதற்கு ஏற்பாடு செய்யப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே விளம்பரத்திற்கு ஒரு ஆரம்பமாகத்தான் சர்க்கார் செய்கிறது. கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னதுபோல, இதற்கு எந்தவிதமான சலுகையும்

26th September 1961]

எதிர்பார்க்காமலேயே இந்தப்பிரசாரம் சமுதாயம் முழுவதிலும் ஏற்பட வேண்டியது மிகவும் அவசியம். கனம் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள், திட்டத்தைப்பற்றித் தம்முடைய கட்சிப் பிரசாரம் செய்து வருவதாகச் சொன்னர்களே, அந்தப் பிரசாரத்தைச் சரியான முறையிலே செய்வார்களானல், அதே மாதிரி மற்றக் கட்சிகளும் செய்வார்களானல் அது வரவேற்கத் தக்கது. மற்றவர்களும் இதிலே பங்கு கொள்வது மிகவும் அவசியம் அதிகமாகச் செலவழித்து பிரசாரம் செய்யவேண்டுமா என்பதை யோசித் துத்தான் பார்க்கவேண்டும்.

*English medium in secondary schools*

* 1845 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state whether grants are given to Secondary Schools giving instruction in English medium?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir, provided such English medium classes are approved by the Department.

SRI N. K. PALANISAMI : May I know whether a large number of schools have sought the permission of the Government to switch over from Tamil to the English medium of instruction, Sir?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir. The hon. Member is wrong. Only a few requests have been made in this regard and they are considered on their merits.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, தமிழ் மூலமாகப் பாடம் நடத்துவதற்குப் பதிலாக ஆங்கிலம் மூலமாகப் பாடம் நடத்துவதை அனுமதிப்பதற்கு என்ன அடிப்படைத் தேவைகள் கேட்கப்படுகின்றன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தமிழ் மூலமாக உயர்நிலைப் பள்ளிகளிலே பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்பது சர்க்காருடைய கொள்கை ஆகும். ஆனல், மொழி சிறுபான்மையினர் விரும்புகிறபடி, அவர்களிலே போதுமான எண்ணிக்கை இல்லாதபோது அவர்களுடைய தாய் மொழியிலே பாடம் சொல்லிக் கொடுப்பது கஷ்டமாகிவிடுகிறது. ஆகையால்,மொழி சிறுபான்மையினருக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க ஆங்கிலம் இருக்க வேண்டுமென்ற நிர்ப்பந்தம் ஏற்படுமானல், ஆங்கிலத்தில் சொல்லிக் கொடுப்பதற்கு வகுப்புகள் ஏற்பாடு செய்யப்படுகின்றன. சமீபத்தில் நடந்த ஸோனல் கவுன்சில் கூட்டத்தில் ' லிங்விஸ்டிக் மைனரிடிஸ் ' க்குப் பாதுகாப்பு அளிப்பதுபற்றி எடுக்கப்பட்ட முடிவுகளில் இது முக்கியமானது. அதாவது—

(1) that the provision as existed on 1st July 1958 in respect of the facilities for English medium instruction should be continued.

(2) that the children of linguistic minority groups should be assured of the availability of the places in English medium sections.

அதிலே நெருக்கடி ஏற்படும்போது, அதற்காக ஆங்கிலத்தின் மூலம் பாடம் சொல்லிக் கொடுக்கும் வகுப்புகள் ஆரம்பிக்க வேண்டும்.

SRI R. SRINIVASA IYER : 1—7—1958-லே ஆங்கிலம் படிக்கும் விஷயமாக என்ன திட்டம் இருந்தது ? அது எப்பொழுது நிறைவேற்றப்படப் போகிறது ? நான்காவது வகுப்பிலிருந்து பத்தாவது வகுப்பு வரையிலும் ஆங்கிலமும் படிப்பதற்கு ஏதோ வழிவகை செய்யப்படுவதாகச் சொல்லப் பட்டதே, அது எந்த வருஷத்திலிருந்து ஆரம்பிக்கப்படும் ?